தீய்ந்துமுந் தீயனெஞ்சம் திகிலிட யிடியம் பேசித்
தோய்ந்த கூரம்பு பின்னூற் றொடுத்திடத் துலக்கிமெய்யை
தேய்ந்திடாப் பகழிகோடி தெரிந்திட வைவையை மாற்றி
யோய்ந்திடாப் பல்கா லாற்றி யொடுங்கிடாவ லியின்மிக்கார். 42

காந்த பாணத்தாற் சும்பன் கைச்சிலை யற்றுவீழப்
பாந்தளா யப்பச் சீறிப் பணவிட நெடிய வொள்வா [ள்வா
ளேந்திவெங் கையைப்போற் பூய்ந்து வெதிருற யிறைவி யொ
டாஙகியோர் பலகை யேந்தித் தாவினு ளருகுவொப்ப. 43

இருவருங கதும்பிச் சுற்ற யிறைவிவாளொ ளியிற்பாப
னிருவிழி சிதரச் சாரி யிடம்வலம் புரிய நீசன்
கரிவுரு பொருதமாயக் கருத்தினை யறிந்து தோள்வா
ளொருநிமைக் குள்ளாய்க் கன்னி யோஙகிவெம்ப டையில்வீப்ப.

## அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

இருவிழி யழற்கட் சிந்த விமையினில் விமலப்பாவை
யுருவினைக் குறைப்பனென்ன வுரப்பொடு வடர வாளாற்
கருமைய சிரத்தைச் சிந்தக் கருங்குருதி கள்வாய் பொஙக
விரணம்வல் சும்பன் மாய்ந் தானிமைய வரிடுக்கந் தீர்ந்தார். 45

## இரத்த பீஷன் சம்மார மான்மியம்.

அறைத்திடு நிசும்பர் சும்பர்க் கனுசிவா னுவரி வெந்தீங்
குறைத்திடு குரோதி யென்பா டந்திடுங் குழவி யாவான்
எறித்திடு மணிப்பாம் பேந்து மேதினிக் கனுட்டங் தாஙகும்
விறற்புறு விறப்புக் கஞ்சா வீரனும் வெகுளிச சொல்லான். 1

குறணிலை நாட்டி நோற்றுக் குரவன்பா லார்க்க மெய்யிற்
சிறுதுளி யேனு மண்ணிற் சிதறிடத் தன்போ லொத்த
வுறுதிமற் பொருதும் வீர னுதித்திடவரங்கொண் டும்ப
ருறைதரு நீழற் கொண்டா னெங்கிய ரத்த வீசன். 2

மும்மதங் கழிற்றின் மத்த முடையவன் முகம லர்க்கான்
வெம்மையக் கிருந்த வண்ண மெய்த்தட வாகு வல்ல
னம்மனத் தமைநெஞ் சாய்வோ டணிப்படை நான்கு சூழ
வெம்மைகிட் டடரத் தேவ ரஞ்சிட வவடண் டார்ந்து. 3

சீயத்தைக் கண்ட வீர சிம்புள்போற் பாய்ந்து வந்த
தீயொத்த சேனை யெங்குஞ் சிதறிட மடக்கி மாய்ப்பத்
தாயந்த சிசுவை யொட்டத் துப்பினர் தயங்கி யோட
வாயத்தஞ் செய்ய நோக்கி யசுரன்விற் கோல மாதர். 4

கணைதொடு முன்னி ரத்த வீசனைக் கவிப்பா னீசன்
தணலெழு சரங்கண் மாதர் தயங்கிடத் தாக்கச் செந்நீர்
மணமிகு மங்கம் பொங்க மாதாக விழையா தோங்கித்
துணிவொடு சூல மாதி படையெலாங் கையி லேந்தி. 5

அடன்மிகு மிரத்தவீச னகத்தை யீர வார்க்கஞ்
சுடர்மிகு புடவி மீது சுசிப்பொறி சிதறி யென்ன
தடமிகு திண்டோள் கொட்டிச் சமரினுக் கெழுந்தார் காயம
விடர்துளிக் கொருவ ராக விழுங்கிமண் ணிறைந்துமல்க. 6

சப்தரு மிரும்பூ தெய்திச் சமரென விளையு மோவென்
றுத்தமி யடியிற் றாழ்ந்து வுதிரமோர் துளியொன் றுக்குச்
சுத்தசௌ ரியராயத தோன்றிச சூழ்ந்தனர் வனங்கண் முற்று
மெத்தகை செய்வ தேனென் றியம்பவம் பிராட்டி சீறி. 7

இருநய னந்தீச் சிந்த விதழ்துடி துடிக்க நெற்றி
புருவமு முந்தி வாயிற் பொங்கிடக் குருதி சால
வெரிவத னங்க முற்று மிருட்படி வமதாய் மையுற்
றிருந்தன மிறுக்க விவ்வா றிருஞ்சின வடிவ மாக. 8

### மாகாளி தோற்றம்.

உரையறி தாயமாய முலகமு மஞ்சமேவுந்
திருவுரு வின்னின்று தோன்றிச செறிதரு கோரமுற்றும்
பொருதின தென்ன நோக்கம் பொழிநெறு மூகைமையாந்து
செருவலி காளிதோற்றஞ் செப்பினங் கருமந் தோல்வாம். 9

கடுஞ்சின வடிவிற் றோற்றிக் காளிமா தேவி யன்னை
தடஞ்சிலம் படியைப் போற்றச் சாற்றின ளிரத்த வீசன்
நெடும்புவி யிடம்பெறாது நெருங்குடல் லுருவா னின்னே
மடங்கலு ணமைப்ப னீயான் மதித்தது புரிதி யென்ன. 10

துட்டர்கண் மெய்யிற் செந்நீர் சொரிதிவ லைகளொன் றேனும்
வட்டங்க ணுறாது நின்கை மலிக்கபா லத்தி லேந்தி
நெட்டங்க விரைச்சி யோடு நெற்றன்வாய் மடுத்தி டென்ன
வட்டங்கை யிடத்திற் சூல மழுப்படை கையி லேந்தி. 11

புன்னகை யோடு மாடன் மேவிரேழ் புவனத் துள்ள
மன்னரைப் பகைத்த ரத்த வீசன்மெய் வகிர்ந்து வீழச்
சின்னமாய்க் குறைத்துச் சிந்தத் திடத்தொடு காளி செந்நீ
ரன்னமா மென்ன வூனோ டருந்தினள் கபாலந் தாங்கி. 12

நிலத்தினிற் றுளிகட் சிந்தா நிருதர்மெய் யூறுஞ் சோரி
துலத்தனை யிறைச்சி யுண்ணத் துலைந்தனர் தொடுவ பூக்கார்
நலத்தடங் குடைந்து தேவர் நடுக்களஞ் சேர்ந்து தேவி
மலர்ப்பதம் போற்றித் தாய்நின் மகிமையை யறியவல்லார். 13

கருணையங் கடலே யன்பர் கருத்தினிற் கருவி யான
பெருவிளக் கொளியே நின்னைப் பேசவா யிரந் தெண்பூ
மருவிய மணியே கண்ணின் மணியெனத் திரண்டு நின்ற
பெருமையே பெருமை வாய்ந்த பெண்ணலாற் பிளைப்பாருண்

வரும்வழி யுறைத்து மாற்ற மாயிடா தவுணர்ப் பூண்டை [டோ.
திருகிய செல்வி யென்று தேவர்கண் மொழிய வாழ்த்தி
தருநிழ லுறைவி யென்று சாம்பவி யேவித் தூவுங
சுருதியுண் காளி தன்னை யுவகையிற் கூவித் தோலவாள், 15

சோரிதூ றற்பூ சிந்தா துண்டுவ னண்டஞ் சூழுந்
தாருநீ ழலினி லண்டர் தங்கவாழ் வளித்த வாற்றாற்
பெருசா மூண்டி யாழே வுலகினி லிருபாற் பெற்ற
வீரமுஞ் சுவினின் பாலே விளைந்தன விறலி னோடும், 16

நறைவிரி தருவின் மேய புலவரின் மிக்கார் நன்மை
பெறநெறி வரங்க ளீய வுளித்தன பெரும்பூ மீது
குறளிவே தாள பூத கொடுங்கணங் களுமுன் சூழப்
பொறைவல மேவி வென்று புகழ்வலி மையுமேற் கொள்வாய். 17

செந்நிம லைய்யென் றிந்தச் சிலம்பினுக் கென்பே ரச்சாசு
பந்நிலம் புகழ நின்பேர் காளியீ னகர மாமோர்
முந்நிரு படையை வென்ற பிடாரிபேர் மொழியு மோர்காற்
செந்நெலுஞ் செழிக்க விக்கா திருவிருந் தாபுர மாமால். 18

அணங்கின மேவிப் பல்கா லவனியி னறையி யங்கி
வணங்கிடா தார்க்கு மேலாய் வாழுநாட் கடந்த காலை
மணங்கமழ் கொன்றை வாகன் மான்மழுக் கைய னிரண்
குணன்குலங் கடில மில்லாக் கோசிகப் பிரிய கோமான். 19

மாரனைக் காய்ந்து காலான் மறலியைக் கடிந்த வல்லொ
னாரணந் தலைவன் றூண்ட வஞ்செய வுன்னி யாறுங
காரணக் காவினின்பா லுற்றிடுங் கருணை மேவி
தாரணத் துறவர் முன்னிற் சக்கர நடுங்கித் தாழ. 20

உளர்த்த தாண்டவங் களாற்றி யும்பர்சி யத்தைச சார்ந்து
சீர்த்தி யாய் வாழ்வா யென்னத் தேவியும் வினவ வேற்று
வார்த்திடு குறளி னேடலகைகள் புடையிற் சூழப்
பூர்த்திகட் கமல பாதம் பணிந்துபூ வாலஞ் சென்றார். 21

எழுவரைப் புகழ்ந்து நீங்க ளிருப்பினு மிருப்பீரப்பாற்
செழுவரை மகுடத்தின்கீட் டிசையினிற் கவரிட் டோங்கி
யெழுவரை யடியி லீச னிலங்குவ ரவரைப் போற்றி
பழுதிலா வாழ்வீ ரென்னப் பனிமொழி யுமைப கர்ந்து. 22

உம்பர்கட் குரைத்த மாற்ற மொதுங்கிடா தம்மை நீசர்
கும்பலைச் சிதைத்த காதை கூறினேன் முனிவா யின்னுஞ்
சம்புவிக் காவின் மேவித் தாண்டவம் புரிந்து நோற்ற
வம்பிகைக் கருள்செய் பேட்டி னமைந்தவா றறைவன் கேண்மி,

## அகமார்க்க தாண்டவமான்மியம்.

### எழுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

சரவண முனிவா தனிநுதல் விழியா
டவடிவப்பணி யேற்று
பரிமள மணியாப் பணிமுகின் மேனி
பூசிய நீறுநாற் படிக
நிருமலஞ் சிலைபோ னின்றொளி பரப்ப
நிகரிரு கிரணமு மொவ்வா
தருண்மறைக் கடலி லலர்ந்தபூம் பாவை
யதிசய மாற்றகி சயமாம். 1

சந்திரி லந்தி வண்ணனை யிருத்திச்
சரந்தனை வெளிவிடா தழுத்தி
மந்திர மெதுவோ மாற்றிட வறியேன்
வந்தனைக் குழறின னெந்தாய்
சிந்தையெவ் வழியோ சிறந்தகா விருந்தஞ்
செய்தநற் றவத்தினுக் கிரங்கி
கந்தமன் வேத வனத்திற் றுந்தோணிக்
கடவுளுங் கணங்களுஞ் சூழ. 2

நந்தனூர் மாலை வனமடுத் தணங்கி
னருந்தவ நளிவிழி நோக்கி
சிந்தைநெக் குருகித் திருமுக மலர்ந்தார்
சிக்கடர் சிகழிகை திருத்தி
வந்தனன் றிருந்தார் குழலியென் றனையு
மனை விழி திறந்தையை வணங்கி
வந்தனஞ் செய்ய மகிழ்ந்தக மார்க்க
தாண்டவ மாற்றனெஞ் சுன்ன. 3

சீரசா கரனுந் திசைமறை யோனுஞ்
சேய னம்மான்முதற் றிசையோர்

நாரத னாதி யாழ்வலர் முனிவர்
    நற்றள சீவன மெழுந்த
காரண னாதி பகவனைத் தொழவக்
    கடவுளுங் கணிந்தைங் கருவி
யோரிசையாக முளக்குவி னுமையா
    ளுளங்களிப் புறநடம் புரிவாம். 4

சுத்தமத் தளமால் தூக்கிச் சாப்பிடச்
    சுதி *யெதி யாயயன் றளந்
தத்திமித் தகதை தாக்கிய நாதந்
    தம்புரு வீணையி னாதஞ்
சுத்தியர்ப் புதகாற் சதங்கையி னாதந்
    தோன்றியோர் முகமதாய் லகிக்க
வத்திமு னெரும்பீ ருந்தொகை யாவு
    மகலிடாப் பிர்மைத்து நிற்க. 5

பஞ்சரா கமுந்தோ டையம்பஞ்ச தாளம்
    பண்ணொடு மஙகளம் பாட
செஞ்சிலம் பிறைவேள் செவிபட மதர்த்து
    சிகியினின் றிருநடமாடி
யஞ்சுக மொழிதா யருகுற வாகு
    வாகனன் பொறிகவான் றுலங்க
கொஞ்சிமுன் னுறவா றிளம்பிறை வேணி
    குலாவிடத் தாதகி லுாகான். 6

நஞ்சணி கண்டனயன மூன்றுடையா
    னளின பாதநூ புரங்கள்
கொஞ்சிட முயலகன் குறுகிட வடத்தின்
    கொங்கொடு கொங்கு வாகிருபா

*எதி யென்பது—தாளயெதி, சமயெதி, சுரோதவகையெதி, கோபுச்சயெதி ஒன்றுக்கு மும்மூன்றாக ஒன்பது பேதமாம். இதின் அம்சங்களைக் காட்ட விரியும்.

லுஞ்செறிந் தாட வுளுஙவதோ விடையி
னிறுக்கிய கச்சுங குச்சாட
செஞ்சடைக் குழவி மதிநதி மழுவு
மொழித்திடத் தமரகஞ் சிலம்ப. 7

கட்செவிக் கங்க ணங்குழை யடியார்
தலைவடங் கழுத்தினி லாட
வச்சதை நீறு பாடீரசந் தனஞ்சாந்
தணிநுத லானன மலர்ந்து
கசசிடைக் கையா லெழுத்திநீண் வலக்கை
கனியெடுத் துண்டுண்டு வுமையுன்
பச்சமெய் தந்தந் தந்தன தானம
பதிநக நாகத்தோங் கென்ன. 8

தட்டிய தவண்டைத் தொனியுளத் தமிந்து
தையலுங் குறுநகைத் தருக்கி
மெட்டிட விமல னறிந்தக மார்க்கந்
தேசிகம் வடுகுசிங களமாய்ச
சட்டென வினவுங் காலமுங் காட்டிச்
சாரியின் ருளமுந் தழுவி
நட்டன மூன்று செய்தன ரென்று
நவின்றிடச் சரவண முனிவன். 9

வணக்கமா யிருகை சிரமிசை கூப்பி
வல்லவ னுடைய மார்க்கப்
பணைத்தையுந் தேசி வடுகுசிங் களமும்
பரவிய சாரிசட் டெனுமெண்
பணித்திட வேண்டு மாமுதுக் குறைவீர்
பகராரி தாம்பர தத்து
னுணுக்கமா யியல்வை யொன்றுவிட் டொன்றாய்
நுவலுவன் றுறந்திடா முனிகேண். 10

## கலிவிருத்தம்.

அகத்து ளுட்குண மூன்றக மார்க்கமாய்
வகுத்த தேசிகம் வடுகு சிங்களஞ்
சகித்த சாத்விக ராசத தாமத
மிகுத்த பண்மை சமம்வண்மை மென்மையாம். 11

ஆதி தலிபா தனுக்கு ப்ரகாசம்
நீதிபுட் பாஞ்சலி நீளற் புயங்க
மோதுவாக்யம் வைப்புத் தேசி யொத்து
மாது ளுக்குக் கவுத்தம் வகுப்புமே. 12

தேசி தெண்டபதஞ் செப்பு மீரெட்டு
மீச ஞுடினசாங் திசைக்கூத் தீதே
தேசி வடுகுஞ் சிங்கள மிந்நடை
தூசி நின்றல் நடித்தல் சுழித்தலே. 13

அகமார்க்க சாரி யனங்கந் துதியாங்
ககமன்ன நாதங் கனிந்த விரதி
சகண தார்ப்பணஞ் சன்னி துரங்கலி
லைகூளெண் டாளமே லையனின் முடிஞர். 14

செயமங்க லம்வன்ன மட்டயஞ் சீர்வி
செயநாத மன்ன லீலகு சேகரம்
வயமா நந்த மன்குடுக் கபி நந்த
மியலுமெட் டாளாப் புசசாரி யிட்டனர். 15

சிங்க விக்ரீடி திரியச் சிரவன்
னங்க மல்லிகா மோதபி நந்தம
தங்கஞ் சாபலீ பின்ன சதுமுக
மங்கதி டெங்கி யதியச் சணமாம். 16

பிரிதி திரிமாத் திரிகையும் பெத்தா
பரணமோ டீராறு தாளம் பணித்தற்
பிரபந்த சாரியு மாடின பித்தன்
கருணை திட்டியின் பேதமுங் காட்டுவன். 17

சமம லோசிதஞ் சாசி பரலோகி
நிமலியுல் லோலித நேரனு விர்த்தி
யமரல் லோகித மாந்திட்டி யெட்டினு
ளமையும் விரிவை யறைப்ப னட்டமே. 18

சூரியன் மாலினை சூழ்ந்த சிறத்தை
சாரு சந்த மிலச்சை விடனையுங
கூறு முக்குளங் குஞ்சி புமலினை
நீர சிம்ம லலிதை திருதையாம். 19

விதர்க்கி தம்வத்த முகுளம் விளம்ப
மதுர விப்ராந்த மாவிப் புலிதைய
கோதரை வீகோ தரை கூறுபத் தோம்ப
திதுச°ரு சாரிநே ரின்னி ரசநேராம. 20

கானகை யர்ப்புதங காட்டி நிம்பகை
யானகை யாங்கரு ணைநகை வீரங்
தானு ருத்திரஞ் சாற்றிய வெட்டுமு
மானிதா யீச்சுரி திட்டி மாற்றமேல. 21

சினுத்தை யிருட்டை குரந்தை திழித்தை
தனிப்ப யானிசை தரித்தை சுகர்த்தை
செனித்த விம்மிதை சிறந்த வெட்டுமே
லினிப்புகலுவ னீச்சுர திட்டியே. 22

பிரமணி வசனம் புரதனம் பின்னும்
பிரவே சந்தை ரகிதம் பிராகிருதந்
திராவூர் நிற்கிரமஞ் செப்பு மெட்டுமான்
திருநே த்ரபேதந் தெளிந்த தாண்டவம். 23

புருவச் சேட்டை புகல்வ னுக்கேபனம்
புருடி குஞ்சிதம் பூபா தன மின்ச
துரமி ரேச்சித நைகர்ச்சிதஞ் சொல்லும்
பிரிவு வேழொடு பிறபுட் சேட்டைகேழ். 24

நிமிட்ட முன்வட்ட நீள்பிர சாரிதம்
சமம்வி தற்கித மஞ்சிதம புரிதம்
விமலப் பிரகிர்தம் விதாடித மொளன்ப
தமைத்தல் விசேட மனத்து மூந்நூலாய். 25

நடிக்கும் தாட்பேத மூன்றொடு நாற்பதி
லெடுத்த தேசி வடுகெழிற் சிஙகள
மடுத்த பேத மூன்றுமென வத்தையு
மொடித்தல் வேண்டு மெனத்தொழு நோக்கியே. 26

எழுசீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மொழிகுவன் விதான கரணமாமிடமி
லகித்தொடு முறைகடி சாரி
கழியகாற் கட்டுப் புரிய முள்ளாழங்
கடிதலங் குஞ்சிப் பூர்தல்
கழனடுக் கப்போக் கப்புதல் வீசற்
கம்பித்தல் வாங்குத லணுக்கல்
வழியிடு புகுதற் குன்றுதல் நெறித்தல்
மன்னுகால் விதான மச்சாரி. 27

சுரிவாங் குதலெண் மூன்றுபே தமுமே
தேசியம் வடுகினை சொற்றத்
தெரிவாய் சீர்தாட் சுத்துத லொட்டல்
கட்டுதல் வெட்டுத னீக்கற்
புரிவாய் முருக்க லணுக்குதல் வீசற்
போக்குதற் குடுப்புத லாங்கத்
தரிக்காற் பதினொன் றுமிதன் பேதஞ்
சார்ந்திடுஞ் சிங்கள மெட்டாம். 28

மெய்யினைச் சாய்த்த லிடையினை நெழித்தன்
மின்பினுங் குவித்தலுஞ் சுழித்தற்
கையினைத் தூக்க லசைத்லும் படுத்த
லணைத்தலுங் கதைத்த னிப்பேது

மையனு டிடுங்கா லங்களா றறைவ
னெட்டுநா ளிரண்டொன் றரைகாற்
துய்யமாத் திரைகை நொடிநிமை நேரென்
றளவெடுத் தனநூற் றுணிவே. 29

தேவர்க டுதிப்பப் பூமக ணொழிப்பத்
தேவியுங் கண்டுகண் களிப்ப
மூவர்பண் சிறப்ப முனிவரா ழிசைப்ப
மூதுமுறைப் பனுவலாட டினிவாய்
நாவினி லிருப்ப நான்முகன் கஞ்ச
தாளந்தாட் கிசைவுற வடிப்ப
பூவணஞ் சொரிய மான்மிரு தங்கம்
புயத்தணிந் திருகையா லடிப்ப. 30

நந்தநந் தனன்வே ணிசைப்பவிந் திரனு
நடுக்கிலாச் சுருதிவா யிசைப்ப
சந்திரன் பணியைத் தந்துமு ழெளிப்பச்
சண்டனுங் கிரணத்தைச சுறுக்க
கந்தனு நடிக்கக் கணபதி நடிப்பக
கங்கையும் வேணியி னடிப்பச்
சுந்தராம் பிகையுன் சிந்தையின் படியே
தந்தநதந் தோமென நடித்தார். 31

## கலிநிலைத்துறை.

நடித்து நாயகன் மங்கையை நகையுற வணைத்திவ்
விடத்திற் பாகமே யளிப்பது விதியதாம் வேலை
னடுத்த மேருவு முடிமலை நின்பெய ரறையத்
தொடுத்த தால்நாக கிரியிரு பாலொன்றாய்ச் சொலிப்பாம். 32

நிர்த்தன மாடிநின்று நிமலையின் மனங்களிப்ப
வர்த்தபாக மெய் யொன்றா யமர்ந்தன நாககுன்ற
மர்த்தபா கமமினொடு நாமம்பூ துறையா மாகி
சத்திமுன் சார்ந்ததாலிம் மலையின்பேர் நிமலை யாமே, 33

| | | | |
|---|---|---|---|
| அக | இராசத குணம் | 7 | தேசி |
| மார்க் | தாமத குணம் | 8 | தெண்ட பதம் |
| கம். | சாத்மீக குணம் | | ஆகப்பதினாறு வீதம் |
| | வண்மை | | |
| | மென்மை | | |
| | சமம் இஃதகமார்க்கம் | | அகமார்க்கசாரிக் |
| தா | தேசி - முன்பின்னடி | | கிரத்தாளம். |
| ண்ட | த்தல் | | |
| வம் | வடுகு-நின்றநிலை நடி | 1 | அனங்க தாளம் |
| | த்தல். | 2 | துதியங்க தாளம் |
| | சிங்களம் - சுழன்று | 3 | அன்னநாத தாளம் |
| | நடித்தல். | 4 | இரதி தாளம் |
| | இஃதகமார்க்க தாண் | 5 | சகணை தாளம் |
| | டவமென்றார் பரத | 6 | தர்ப்பண தாளம் |
| | நூலார். | 7 | சன்னி தாளம் |
| | | 8 | துரங்கலீலா தாளம் |
| | அகமார்க்கதாண் | | |
| | டவம். | | ஆளாப்புச்சாரி. |
| 1 | ஆதி | 1 | ஜெயமங்கள தாளம் |
| 2 | தவிபாதம் | 2 | வன்னமட்டய தாளம் |
| 3 | அனுக்கு | 3 | விஜெயநாத தாளம் |
| 4 | பிரகாசம் | 4 | மன்னலீலா தாளம் |
| 5 | நீதி | 5 | இலகுசேகர தாளம் |
| 6 | புட்பாஞ்சலி | 6 | சிங்கநந்த தாளம் |
| 7 | நீளல் | 7 | குடுக்க தாளம் |
| 8 | புயங்கம் | 8 | அபிநந்த தாளம் |
| 1 | வாக்கியதாண்டவம் | | |
| 2 | வைப்பு | | பிரபந்தசாரி. |
| 3 | தேசியொத்து | | |
| 4 | துணுக்கு | 1 | சிங்கவிக்ரீடித தாளம் |
| 5 | சவுத்தம் | 2 | திரியச்சிரவன்ன தாள |
| 6 | வகுப்பு | 3 | மல்லிகாமோதகதாள |

4 அபிநந்தன தாளம்
5 மதங்க தாளம்
6 சரபலீலாதாளம்
7 பின்னசதுமுகதாளம்
8 டெங்கிதாளம்
9 அதியச்சணா தாளம்
10 பிரிதிதாளம்
11 திரிமாத்திரிகைதாள
12 ஆதிபெததாபரணம்.

இத் தாளங்களால் மூன்றுவித சாரிட மாடினர் பரமசிவம்.

திட்டிபேதமென்பது

1 சமவிழி.
2 அலோசித விழி
3 சாசி திட்டி
4 பரலோகி திட்டி
5 நிமிலி திட்டி
6 உலோகித திட்டி
7 அனுவிருதி திட்டி
8 அல்லோகித திட்டி.

ஆக 8 இதில் வரும் பேதகங்கள்.

சஞ்சாரி திட்டியாவன

1 சூரிய திட்டி
2 மாலினை திட்டி
3 சிறந்தை திட்டி
4 சஙகத திட்டி
5 இலச்சை திட்டி
6 விடனை திட்டி
7 முகுள திட்டி
8 குஞ்சிதை திட்டி
9 புமலிமை திடடி
10 சிம்மமை திட்டி
11 இலலிதை திட்டி
12 திருதை திட்டி
13 விதர்க்கித திட்டி
14 வத்தமுகிள திட்டி
15 மதிர திட்டி
16 விபபிராநதை திட்டி
17 விபபுலிதை திட்டி
18 அகோதரை திட்டி
19 விகோதரை திட்டி.

ஆக 19.

ரசதிட்டி பேதம்.

1 கானகைக் கண்
2 அற்புதக் கண்
3 பகைக் கண்
4 பானகைக கண்
5 கருணைக் கண்

6 நகைக்கண்
7 வீரக்கண்
8 உருத்திக்கண்.
ஆக எட்டு.

### தாயீச்சுரிதிட்டி பேதம்.

1 சிஹுத்தைக்கண்
2 இருட்டைக்கண்
3 குரந்தைக்கண்
4 திழிக்கண்
5 பயாநிசைக்கண்
6 சுகுர்த்தைக்கண்
7 தரித்தைக்கண்
8 இம்மிதைக்கண்.
ஆக எட்டு.

### ஈச்சுர திட்டிபேதம்.

1 பிரமணிக்கண்
2 வசனக்கண்
3 பூரதனக்கண்
4 பலனக்கண்
5 பிரவேசக்கண்
6 தைரகிதக்கண்
7 ஊர்த்திரக்கண்
8 நிற்கிரமக்கண்
9 பிராகிர்தக்கண்.
ஆக ஒன்பது.

ஊர்த்திர மெனும் பாலை,திரஞூர்த்என்று, பாட்டெதுகை மோனை தழுவி நிற்கிறது.

### புருவச் சேட்டை.

1 உக்கேபனம்
2 புருடி
3 குஞ்சிதம்
5 பாதனம்
5 சதுரம்
6 ரேசிதம்
7 நைகூர்ச்சிதம்
ஆக ஏழு.

### புட்சேட்டை.

1 நிமிட்டம்
2 உன்மட்டம்
3 பிரசாரிதம்
4 சமம்
5 விதற்கிதம்
6 அஞ்சிதம்
7 புரிதம்
8 பிரகிருதம்
9 விதாடிதம்.
ஆக ஒன்பது.

இவ்விதமாகக் கண்களை யுருட்டியுஞ் சிமிட்டியும் புருவத்தை நெரித்துங் காட்டினார் பரமசிவம். ஆய்ந்த பரத வல்லர் இன்னும் விரித்துரைப்பார்கள்.

### நடத்தில் நிற்கு நிலை ஆறு.

1 வைநவம்
2 சம நிலை
3 பைசாச நிலை
4 ஆலிட நிலை
5 மண்டலி
6 பிரத்தியாலிட
(வருமாறு.)

1 வைநவம்
2 சம நிலை
இரண்டு பாதத்தையம் சரியாய் நிருத்துவது.

3 பைசாசம்
ஒருகாலூன்றி வொருகான் முடக்குவது.

4 மண்டலம்
இருகாலு மண்டலித்திருப்பது.

5 ஆலிடம்
வலக்கான்மண்டலித்திடக்கான் முன்வைப்பது.

6 பிரத்தியாலிட
வலக்கால் முன்வைதது இடக்கால் மண்டலிப்பது.

ஆறு நிலையாம்.

## தேசி வித, விதானம் என்பது.

1 கரணம்-என்பது (சமநிலையில்-வலதுகான் முன்வைத்து இடதுகால் பின்வைத்து வலமிடம் முறுவதாம்).
2 கரணம்-என்பது சரியாகநின்றுஒருகாலைத்துடையினிற்சேர்ப்பதாம்.
3 ஆலிடம்-மண்டல நிலையிற் றுடையின்பேரில் ஒருகாலொட்டித் திரும்புவதாம்.
4 இலகித்து-சதுரமண்டலமாகவிருந்து இடையசைப்பதாம்.
5 கடிசாரி-இருகாலையுஞ் சமமாகநிறுத்திக் கடிதடமசைப்பதாம்.
6 கழியகால்-இரண்டு கால்களையுங் கட்டித்திரும்பிமுன்னூன்றுவதாம்.
7 கட்டுப்புரியம்-ஒருகாலை முன்தட்டி ஒருகாலைப்பின்குத்திப் பின்னூ வதாம்.
8 உள்ளாழம்-ஒருகாலையூன்றிஒருகாலைச் சுற்றி யொட்டி யிறக்குவதாம்.
9 கடிதலம்-மண்டலியாக இடதுபாரிசம் வலதுகாலை யூன்றி இடது காலை முன்காலுடன்கட்டி வீசுதலாம். (தாம்
10 குஞ்சிப்பு-ஒருகாலையூன்றி ஒருகாற்பெருவிரலை நிலத்திலூன்றுவ
11 ஊர்தல்-இரண்டு கால்களையும் தட்டி முன்னே போயும் பின்னால் வந்து பார்சங்களில் வருவதாம்.
12 நடுக்கல்-இரண்டு கால்களையுங் கததிரியாக நிறுத்தி யசைப்பதாம்.
13 போக்கல்-ஒருகாலை நெளிவாக யிடையிலே குத்தி முன்காலை முன்
14 அப்புதல். (தட்டி வீசுவது.
15 வீசுதல்-ஒருகாலை நாலுபக்கமுந் தட்டிக்கட்டி வீசுவதாம்.
16 கம்பித்தல் - கால்களிரண்டையும் ஒன்றாய்ச்சேர்த்தி பாரிசத்திற்
17 வாங்குதல். (கட்டுவதாம்.
18 அனுக்கல்-இரண்டு படத்தையு மூன்றி குதிக்காலைத தூக்கி யனுக்குவ தாம்.
19 இடுபுகுதல்.
20 குன்றுதல்.
21 நெறித்தல்.
22 மாறுகால் விதானம்.
23 அச்சாரி.
24 சரிவாங்கல்

**வடுகு.**

1 சுத்துதல்
2 ஒட்டுதல்
3 கட்டுதல்
4 வெட்டுதல்
5 நீக்கல்
6 முருக்கல்
7 அனுக்குதல்
8 வீசல்
9 போக்குதல்
10 குடிப்புதல்
11 கத்தரிக்கால்.

| அக்ஷரம். | மாத்திரை | அங்கம் | அங்கப்பெயர்கள் | உற்பத்தி |
|---|---|---|---|---|
| க | ச | | மூன்றாம்பிறை | ஈசானமுகம் |
| உ | இ | | பூர்ணமதி | தற்புருடமுகம் |
| ச | க | | அம்பு | அகோரமுகம் |
| அ | உ | | வில்லு | வாமமுகம் |
| கஉ | ரு | | சர்ப்பம் | சத்தியோசாத |
| கசு | ச | | அன்னபதம் | ஊர்த்துவமுகம் |

**சிங்களம்.**

1 மெய்சாய்த்தல்
2 இடைநெளிதல்
3 குவிதல்
4 சுழித்தல்
5 கைதூக்கல்
6 அசைத்தல்
7 படிதல்
8 அணைத்தல்.

| ருஷிகள் | தேவதை. | ஜாதி. | வர்ணம். |
|---|---|---|---|
| நந்திகேசுரன் | வருணன் | வைசியன் | வெண்ணிறம் |
| பிரமன் | பிரமன் | பிராமணன் | சிகப்பு நிறம் |
| துர்க்கை | இந்திரன் | க்ஷத்திரியன் | பொன்னிறம் |
| நாரதர் | சந்திரன் | சூத்திரன் | கருப்புநிறம் |
| வாணசூரன் | அம்பிகை | சூரியகுலம் | பச்சைநிறம் |
| பானுகம்பன் | திரிமூர்த்தி | சங்கரஜாதி | பலநிறம் |

**தேசி-நடந்தாடல்.**

| சட்காலம் | காலத்தின பெயர். | மாத்திரை |
|---|---|---|
| 1 | தககணம் | 8 |
| 2 | வார்த்திகம் | 4 |
| 3 | சித்திரம் | 2 |
| 4 | சித்திரதரம் | 1 |
| 5 | அர்த்தசித்திரம் | இ |
| 6 | அதிசித்திரம் | வ |

**வடுகு-நின்றவிடத்திலாடல்**

**சிங்களம்-சுழன்றாடல்.**

சட்கால நிலை மாறாமல் உமையவள் களிக்க அகமார்க்கத் தாண்டவ மாடினார்.

## மயூர தாண்டவ மான்மியம்.

### கலி நிலைத்துறை

திருமுக மலர்ந்தநாதா திருநட னங்கள் செய்தே
ஒருமுகமி ருபாலாமென் றுமைமக கருடநது நாக
கிரிமுக மெழுநதகதை கிளததினன் பொளிபடாக காடடி
கரிமுகாககி னையாறுமை கரணனே கருதகதென் றோது. 1

திஙகட செஞசடைத தேசிகன் சிகரவெற படியிற
றஙகி யாண்டலைக கொடியனைச சிறபபிதத தகைமை
பஙகி தஙகளை பியறறுவா யெனநமபி இறைஞசப
பொஙகா மாதவப பூசுரன் புனைந்துறை தொடுததார். 2

## புட்பவனச் சிறப்பு.

கொஙக ஞெடடினிற கொஙகு காடடிநிம னைநதருககத
டஙகு கோடடததுட டஙகொரு கோடடைங் கரமா
தஙக நாட்டத்துக் கின்புற நாடடிய மயிலிற
றஙகி நாட்டாமுன் காட்டிய தண்டலை வடகீழ்த். 3

திசையி லமமலைச சாரலிற செண்பகம புன்னை
நசையி லைமபாலை நறகுரா மாதவி மகிழ
மிசைய சோகு பாதரி மராமரமின் மகளிக
கிசைய வேதச மெழிற கொன்றை கூவிளந தாளை. 4

இததி யததி மாதுளை யெலுமிசசை கொளுமிசசை
தொததுமுததுள தொரடடி யாலரசு வேமபொடுநா
ரததை திததிக காஞ்சோரி கருநொசசி யருநெலலி
சித்தற கொததபூங் தருசசில வடாந்துதேன் றுளிககும. 5

குளிருங கொன்மலைத தண்டலை யாவினம வளாபுற
றுளிருங கமடையுங் தின்றதாற சுதைமிகுந ததனகண்
குளியுங குடடியு மூடடியுங் குறைபடா தொழுகி
வளியுங் தேனெடு மழைகலந் தறைவனம பாயநத. 6

கோங்கு மாகமு மாகத்திற் பாய்ந்துமே குலவுந்
தேங்கு வாழையின் வாழையும் பாய்ந்தடந் திரியும்
வேங்கை மாதவி மாதவி பாய்ந்து மேன்விரிந்து
வோங்கு மாவன மாவனம் பாய்ந்து கண்ணுறங்கும். 7

மடவை மேலொரு மடவை பாய்ந்தம் மடையடையுங்
கொடியின் மேலொரு கொடியிருந் தக்குல மழைக்குந்
துடியின் கீழிரு துடியிடை யெங்கினுந் துலங்குங்
கடியின் மேற்கடி பொருந்தி யெங்கினுங் கடிகாவே. 8

சந்தனத் தருவீதி னிற்சதத முஞ்சந் தமகவல்
சந்தமக் கிளிகள் சமமெடுத் தோத சந்திரகால்
கொந்துணுட் செறிந்து சுழுரிடு மோதையிற் கலரா
நந்தனன் குழலென விசைகுயில் பயில்நா கத்தே. 9

செண்பகத் தருவடி யினிற்சே வலகண் மத்தளம் போற்
பண்புடைசசிற கடித்திடப் பாவைபோ லனங்கண்
மண்பு கழ்த்திட தடமிட மலர்தலை யசைப்ப
விண்பு கழ்த்திட விளங்கனி தளங்கொட்டும் வெறிகாண். 10

காக முற்றவ்னக் கனிகளை மந்திகைப் பறித்து
போக முற்றதங் குரங்கினுக் களித்து முத்திட்டு
வேகி யககலி னுச்சிவா ளெழிற்றரு வசைத்து
நாக மெடடித்தன் னுகத்தைச சார்ந்து நாகம். 11

ஆடன் மாவன வளத்தினை யளப்பதற் கெளிதோ
சேட னுவிருபத்து நாரினுஞ் செப்ப முடியா
தோடி னன்பொனி நதிகடந் தக்குணக் கொருபாற்
சேட னுனு வறைகுவன் சிகண்டிமா நடனம். 12

## கைலாய நாதர் காரணம்.

மாயன் மாலை வனத்தவ வன்னையை வணங்கிச்
சாய்ன் மஞ்சையிற் சையிலத்தை வலம்வந்து வடகீழ்த்
தோயுந் தேமலர் வனத்தினைக் கண்டு சுப்ரமணியந்
தாயி சானவி தனைநினைந் திடாங்கு சனித்தாள், 13

கஙகை யாடியோர் கைக்கம லாலய மெனவே
யக்கை சேர்த்தியோர் கையினை லிஙகமா யமர்த்தி
யைங்க ரக்கர மஞ்சையு மாறென மதித்தார்
கங்கை சூடிய கையிலை நாதனு மவனென்றே. 14

வான நாடரு முனிவரெண் டிசையர் மாலயனுங
கான நாடிய கடவுளின் மகிமைகண் டுதித்து
தான நாடிங்கு தகுகுக வெனவாட நடவ
ஞன நானென மயின்மிசை நசையொடு நட்னம். 15

ஆடி-னரிரு சிலைகளை யுயிரங்களு சச்ச
பீட மோர்சிலை யிருகளை பிறையொடு சாச
பீடமா முயிர்களை சிலைகளைசிலை பின்னுங
கூட வொருயிர் சற்பித புத்திரங் குறியே. 16

சமபத் துவேட்ட முக்குரு விருபாலுயிா சாரும
நம்பு முசசிலை யுற்கடித மஞ்சுதாள நவிலும
இன்ப மாய்த்தேசி வடுகு சிங்களநடை யெழிலாய்
நிம்ப மாலியன் மயூர நின் றுடிடு நிலையாறே. 17

சந்தக் கலிவிருத்தம்.

கண்டுமேநவ விரவாகுவு கஜசதாளமெ டுத்துகை
கொண்டுதாகிட தத்திதோமென தம்பிமத்தளங கொடடிட
வண்டபூமிக ளதிரநாகமு மாதிசேடனெ ழித்திட
பண்டு யாழொரு தமபிதாககிசை பாடினுமொரு விரனே. 18

வேணுநன் சுர பத்துகஞ்சரி வேதசுதிகு மன்முக
வினையோடிசை பண்ணெழுப்பின விராநாதமுங் குடையென
தாணுவோங்கிடங குற்றவகரி னைதங்கியங்குமு நின்றிட
தாணுவாகநின் றுடினர் மயில் சாயமாதாக ஞணவே. 19

சத்திவேண்மணி தாளநூர தண்டைமத்தள மற்றது
மொத்துநீண்முனை நாதநாடிட யோககியாடிடு நாதனை

சுத்திவானவர் துத்திசெய்துத குந்தகுந்தகு தோமென
நிர்த்தஞானம யூரனே ஜெய வென்று கொண்டுநின் றாடினார். 20

பாடினார்சிலர் சூடினார்சிலர் பன்மணித்தொடர் வாகனை
நாடினார்சில ராடுதாண்முடி சூடினார்சிலர் நன்மலர்த்
தோடுணைட்டி சூடினார்சிலா கோடுபம்பென வூதினார்
மாடைவீசனம வீசினார்சில ராடவர்மரை வட்டமே. 21

கும்பனோடெழு முனிவருஞ்சிவ 'கோலமேசுப பிருமமே
நம்பினேன்குரு வென்னவெண்டிசை நாதாவிரு துக்குடை
யுமபாநாடுறை யும்படிபிடித தோம்சதாசிவ சண்முகத்
தம்பிரானுனை யன்றவேறிலை யாண்டவாசெய தாண்டவா. 22

என்றுதேவர்க ளேத்தவேயரு ளாடியாகளு மாடமுன்
னின்றுவேங்குக கந்தகந்தக டமபமாலிக நிபுணனே
குன்றுகுன்றுக டஙகிடத்தக தண்டுகொண்டகைக் கோலமா
நின்று நின்று கூத் தாடினாரிரு கண்களிக்குமிங் காடினார். 23

சாமிநாதச பாசுவென்றுகை தட்டினார்லய காலமாப்
பூமயூரமெழுந்துதோகைகட பூத்ததோாகொடி பாளென
தாமமாயிற கைவிரித்தெதி சமசுரோதகோ புசசமா
பூமிமேலடி தாக்கியுந்தகை யாதுமாடின பொறிகழல. 24

தண்டைகிண்கிணி கிண்கிண்ணென சதஙகை கலகலீரென
கொண்டைமுக்கணி னின்றுபன்மணி கூழைதளத ளாவென
மண்டலாகர மாகவாடிடு வன்மயிற்கினி நேசமாக [னார்.
கொண்டல பொன்மழை தூரவண்டர்கள் பூவைபூமழை தூரி

யிண்டு கண்டும தஙகைபாலனே வேலனேயென வாழ்த்திட
முண்டகாசினி தண்டமிழ்மணி கண்டுதிட்டிமுன் சுற்றிட
சாண்டனம்புலி கண்டுவிண்பிர தசசணம்வர விறைதொழ
துண்டநிக்கிரக சண்டவேறபடை கொண்டகுமர துரந்தரன். 26

மகதிநாதர் பிரகதிதும்புரு வாணிகசசள கின்னரி
சகளவல்லகி கீஸ்திருசசிசா ரஙகபஞ்சிகை சரவீணை

சுகவராளிகு லாக்ஷருத்ரிகை கூர்மியனும துகாந்தரி
பகர்களாவதி கோஷசித்ரிகை யென்னுமியாழ் பரிவாதினி. 27

மீட்டினுருகு வேதபைரவி பூபாளமு மாணுமனை
யாட்டி தேவகி ரியைமேகவி ரிஞ்சியாங்குறிஞ் சிசிறி
ராட்டிவேளவ ளிமலஹரி பௌளியென்றமை ராகமுங்
காட்டிதைத்ரிய மறைசிராகமம் படமஞ்சரி கணவரும். 28

இந்தோளபல் லதிசவேரியுந் தேசிதோடியபி லவிதைபெண்
சந்தநீடிய சாமவேதவ சந்தமாளவி யாண்மதி
கந்தராமகி ரிவராளினிகை சிகமுகுண் டக்கிரி
பந்தமாகிய கூர்ச்சரியுநா ராயணியுசுபமாதரே. 29

அதர்வணமறை யுதனிர்பஙகள நாட்டைராகமு மாணுமா
மதனிலாடனி யாசியாஙகுகாம் போதிகௌளிதே சாச்சரி
யுதவிகாந்தரி சாரங்கமென் றேதுராகமெண் ணுலையர்ப்
புதமவெண்டிசை யுருசுமனரம் புக்கருவியிற் காட்டினர். 30

## மார்கண்டேச்சுர மான்மியம்.

### கலி விருத்தம்

கையிலை நாதனைக் கையா லமர்த்திமுன்
மயிலு நாதனு மாடிய மான்மியம்
பயிலி னேன்பனி யோதிமத் தின்னமென்
குயிலு மென்னக் குறித்தன ரானனம். 31

கால னுடா துதைத்தவ ரோதிகண்
கோல நீடி வளர்ந்ததென் கூறுவீர்
சீல நீடுமறைத் தேசிக னேயென
ஞால மீது பணிந்தர் நகையொடு. 32

பணிந்த சைவப் பயிர்க்கு மழையெனத்
துணிந்த மாதவர் சொற்றத் துதித்தன
ரணிந்த கங்கை மதிகச்சி யாளரை
யணைந்த மங்கை மலரடி யன்பொடு. 33

ஆகம நம்பிகே ளாய்ந்த மிர்கண்ட
பாகம மர்ந்த மணாட்டியைப் பார்த்து
சோகம டைந்தர் சுமங்கலி நோக்கி
யேகம னத்தரே யீ இதென் காரணம். 34

கேட்கு மாதே கிளற்றுவ னுண்மகு
வாட்கை யிலார்க்கு வானவா நாடிலை
நாட்க டோயு மலைமுனி நாதனும்
வாட்கை யிலாத மயங்கி நின்றாரே. 35

மயங்கி நின்ற மலைமுனி காதையை
யியம்பு மென்ன விருகரங் கூப்பினாள்
பயந்து கேட்ட மனையாட்டி பண்புற
நயந்து சொற்றத் தொடங்கினா ஞானவான். 36

அறத்திற் சிறப்புற்ற தில்லை நல்லறம
மறுத்து மாதவஞ் செய்த வகத்தியா
குறித்து வான்கிளை தொங்குந் தவக்கோல
மறைத்து மென்ன வடிபணிந் தேத்தினார். 37

தாதைதன் றாதை தாதைமூ தாதையென்
றேழு மறியா திருடியை நோக்கித்
தாதை தன்சேய னென்றறி யாமலு
மோதத் துடங்கின ருண்மை துணிந்தே. 38

## கலி நிலைத்துறை

செகத்தி லெங்கணற் குலமதிற் பிறந்து செந்தமிழா
ரிகத்தி யன்மக மனத்தையுந் தவரிடா நடாத்தி
யிகத்தி னின்றிறை யெங்களுக் களித்திடாத் துரோகி
மகுத்து வந்தவ மகுத்துவ மல்லென வறைந்தார். 39

அம்மொழி கேட்டங்க மடங்கலு நடுங்கக் கூவி
நன்மொழி யறைவீர் தாதை தாதைமூ தாதைஞாதீர்
சொன்மொழி நடப்ப னென்கோ தாற்றெனத் துதிக்க மின்னா
ரின்மொழி மாதுநீயு மெள்ளமு தளிக்க நன்றாம். 40

தெளிந்த ஞானியுஞ் சேய்தனை யீன்றபின் சிறந்தார்
குளந்தை யின்றியாங் கொடுந்தவஞ் செய்ததாற் பயனென்
றுளந்த யங்கியே மிருகண்டர் மனவியாட் கோதத்
தளர்ந்து மெய்சிலிர்த் தாழிகண் டாரைபோ லுதிர்த்தாள். 41

மங்கையின் றுயரையாற்றி மனமிரு பாலுமொன்றாய்க்
கங்கையுங் குழவித்திங்கள் கவிந்தசெஞ் சடையன் றன்னை
யங்கெங்கு மசையா துள்ளத் தழுத்தியஞ் செழுத்தையோதிச்
சங்கரன் றிருவை யாலோர் தனையனைப் பயின்றார் மன்றே. 42

தனையனு முத்தனாகித் தரலரியிற் சிறந்த பஞ்ச
சினையணி பெற்றிலங்குஞ் சேதிமத் தலங்கண் மற்றும்
முனையணை யற்றுவஞ்சு கூவிமோர் முகமாய் நின்றம
மனுவணி சிறந்த மைந்தன் பலப்பத சாரியாமால். 43

தலங்கடன் டலைக ளெங்குந் தங்கிடுஞ் சுயம்புலிங்க
மலங்கிடுஞ் சிலம்புவெல்லா மின்புர வருச்சித் தேத்தி
நலங்கொடு கடையூரா தன்னின் னருச்சனி மிடரோன் கோட்டம்
வலங்கடி மலர்க்கை சென்னி வைத்துசூ லரிவையென்ன. 44

அடியினி லடியாயிட் டங்கத்தி னின்சுமை பூவெருக்
கொடிமுடிசி கரச்சாயற் குடபடா தொதுங்கிக் கொண்டு
படிமுகப்பி ருக்கும்பீ டத்தடியி னிறபடிந்தார் துண்டங
கடிபுய மிருதோட் கண்ணாந் தாண்மூள பண்கடோய. 45

எழுந்திரு கரமுங் கூப்பி யியங்கிய காவனந்தி
குழைந்தெழு மிருகோடுற்ற குளிர்ந்த வானனத்தை நோக்கி
குழந்தையம்பு லியார்வேணி கொருசுநு புரந்தாள் வில்வக்
கொழுந்துனை லரிசசித்தேத் தககொடும் விடைபொன்னுங் கா[illegible]

ஆண்டொருபத் தாறென்ன வளித்தனன் வயது நாகம
பூண்டவன்மி ருகண்டர்க்கோர் புத்திர னெண்ணின் றோடு
தாண்டினதவன் பாற்சென்று சடதுயிர் கவர்ந்தா லென்ன
தூண்டதென் றிசையையாள்வோன் றூதருங் கடையூர் கண்டார்

---

45-பா-4-அசேடு-நன்மைபெருமை- பானைது திக்கையாற் றழுவல்
46-பா-3-அடி-வாடி-வினையெச்சம் கூடுவிட்டுக் கூடுபாயுந்தொழில்
45-பா-4-வரி-தாண்மூள முழந்தாள்

நந்திபுன் முறுவலுற்று நன்முநி மகவை நோக்கித்
தந்தவெண் ணிரண்டாண்டின் றேடாயின தருமன் றூதாள்
வந்துமுன் வாயினின்று வரவுபார்த் திருக்கி முர்நீ
யந்திவண் ணனையே பூசித்தாங் கிருவகலா தென்றார். 48

சாற்றியமொழி யைக்கேட்டு தயங்கிநின் றுளத்தைத் தேற்றி
தோற்றியசிவ லிங்கத்தைத் தொழுதெழுந் துள்ளே சென்று
கூற்றுவன் றூதர் வந்தார் தடுத்தெனையாட் கொள்ளென்று
போற்றிநின் றர்ச்சித்தார் பூவரும்பு பத்திரங்கை கொண்டே. 49

சகத்திர நாமமோதத் தங்கிய கால தூதா
ளகத்துனுட் செந்தீஇப் பாய்ந் தாரிடா தயர்ந்து வம்மி
தகித்திடு மென்றுசென்று சண்டன்முன் மரம்போல் வீழ்ந்து
செகத்தின்கட் சிறந்ததர்ம சீலரோ செப்பக் கேண்மோ 50

தென்றிசைக்கோ வேநின்சொற் றெரித்தன்முன் கால்போற்
[சென்று
கன்றிளம் பசுவாய்நின்ற கடவுளின் கோட்டம் புக்கிச
சென்றவன் வரவைநோக்கிச் சேதிம வாயன் னோராய்
நின்றிட ஒருகிழிபாய நெஞ்சுலர்ந் தோடி வந்தோம் 51

மருத்தொட ராவுசென்னி மாலைமான் மழுவு மேந்துந்
திருக்கடை யூரனுதி செப்பிய வாண்டு சென்றுஞ்
செருக்கொடு முனிவன் சேயைச் சேதிமத்துள் வைத்தெந்தன்
றிரத்தினை யறிய வென்றேற தீயிட்டா ருங்களுக்கே. 52

அவனவனென் றியாப்பூமே லாக்கினை செய்தா லந்தச்
சிவனவ னென்னசெய்வ ரென்று சேதிமத்திற் புக்கி
பவனவன் பூசித் தாலும் பகர்ந்துயிர் பரித்துவாரா
தவனன்மே லிட்டனென்னச சாற்றினய் தூதா வென்றே. 53

இருவிழி சிவப்பச் செந்தீப் பொரியெழ விருண்டமெய்யிற்
பரவிய கரத்திற் றண்டம் பாடங்கொண் டேறுவேறிக்
கருவியாய்மு னிவன்சேயைக் காப்பவன் கடையூர் புக்கி
திருவிளை யாடுங் கோட்டத் தடியினிற் செறிந்துமன்னே. 54

அந்தக னதிர்த்திப் பாட மர்ச்சிக்கு முனிவன் மீது
சிந்திடச் சினந்துலிங்கந் திறந்திட மழுமானேந்தி
யுந்திடக்கா லாலோங்கி யுதைத்தனர் காலன் சாய்ந்து
மந்திரவா யன்முன்பாய் மண்ணினு ளாழுந்திக் கூவி. 55

காங்கேய முருக கந்தா கதிர்வடி வேலா வேளாய்
தாஙகொணு துயிரிக் காலந் தடுத்தெனை யாட்கொளென்று
தேங்கிநெஞ சுலர்ந்து விம்மிந் திருக்கெலா மாழிசிந்த
ஆஙகவ ளுனைதயுள்ளத் தடக்கிமுன் னடுத்தா ரன்றே. 56

அறுமுகச் சிவமே ஐயையாகிய தேவயானை
நறைமலர்த் தொடைவா குற்ற நாதனே சனவியென்னுங
குறமகள் பங்காகோழிக் கொடியனே கொடியன்செய்த
குறைபொருத்தருள் வாயென்னக் குறித்தனர் சிகரக்குன்றே. 57

தடந்தடந்தட முண்டேழுந்து தடக்கரை தடமொன் முற்றி
தடந்திடம்பட நின்றோங்கித் தடமிகக் கையா லிங்க
மிடந்தரும் படிகமேந்தி யெழில்வலக் கையாற் புட்பந்
தொடர்ந்தருச் சித்தா லாங்கு தோன்றுவாறீ ரெட்டாண்டே. 58

துதிசெயுமா ரூர்வீதி சுதையுனக் களித்த பாசு
பதியுள மிரங்கியாங்கு பதிசெல வளிப்பா ரென்னக்
கதிரயிற் படையன் செப்பக் காஞ்சிரங்கூட் பியந்தோ
வுதையினி லயர்ந்தன்செல் லவுறுதி குன்றிற்றே னைய்யே. 59

என்றதுகேட் டுசெவ்வே ளெறும்பி யானனனை யேத்து
மென்றுகோட் டத்திற்புக்க வேமனு மோகை கொண்டு
நன்றுகோ டொன்றிரண்டு நற்பத மூன்று கண்ணூர்
குன்றுதோ ளைந்துகையோர் குஞ்சர வதனு போற்றி. 60

மூவர்க்குமு தலாபோற்றி முத்திக்கு வித்தே போற்றி
தேவர்க்குத் தேவேபோற் றிதெளிமறைப் பொருளேபோற்றி
சாவுக்கு மணத்தினுக்குஞ் சார்ந்துமுன் னிற்பாய போற்றி
பூவுக்குளாழ்ந் தேனுளி வாகனு போற்றி|யென்ன. 61

சாமரச் செல்வி ரண்டிற் றடையரக் கேட்டெழுந்து
தாமரைப் பதம்பூமேவத் தனியனு வோடிவந்து
வேமனின் முறையா திம்மண் ணிருப்பதென் றிசையைவிட்டு
தாமதஞ் செய்யா தென்முன் சாற்றுவா யென்று மாற்ற. 62

## அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

மொழிந்த மாமுக னடிமலர் முடியுற
நெறியொடு தொழு தேழ்ந்து
விழுந்த வாறுக ளனைத்தையு முறைமுறை
விரிக்குவ னதுகேண்மீர்
குழந்தை மாமுனி வயதுக ளரவுயிர
கொடுவரு முனமேந்த
லெழுந்து காலினி லுதைத் தனாடபடி
யழுந்தின னென வெதிர்கூர்ந்தான். 1

பிறந்த மானிட ருடலுயிர் பிறித்திட
வெனக்கருட் பரந்தாமே
மறந்த ரோபழி சுமப்பாக ளெவரவர்
மனதகினு நிறைந்தானே
சிறந்த கோவறம புறந்திறந் தரந்தெரிந்

தெறிந்த காலினர்க் குரைப்பவ ரெவரவ
ரெனக்கரு டருந்தேவே. 2

தளர்ந்து வாணிய வியமனை யமலேமு
னவனெடுத் தயர்நீக்கி
வளர்ந்து வானுரை சிரகிரி யெழுவொரு
விழிபடர் துடன்மாற்றி
துளைந்து பூமியைப் படர்ந்திதொண் டுறுவெடுத்
தருந்தவ முறையாற்ற
குளிர்ந்து கோதிலர் கடையுதைத் தவர்முடி
தருவரே தணிகூற்று. 3

## கலி விருத்தம்.

கூற்றா வென்னக் குளிந்த மொருபகர்ந்
தாற்று வித்தவல் லைங்கரத் தெய்வமே
தோற்ற வில்லை யொருமனுச சூத்திரஞ்
சாற்றினேன் விடை தந்தருள் வேண்டுமே. 1

தூங்க மாமுக சுந்தர ரூபவென்
றீங்கை யாற்றிய தேவசி காமணி
யீங்கு மாற்றின தேக மெழுந்துமு
னாங்கு தோற்றுமோ யானதற் கென்செய்கேன். 2

ஊன்றி யாக்கை யகற்றெனச் செப்பிநீர்
குன்று கிட்டக் குடையுமோ விவ்வுயிர்
கன்று விட்ட பசுப்போற் கலங்கிட
தென்றிக்க சிறந்தென் னாதட் புக்கென்றே. 3

செப்பிய தூங்கமே செங்கழு வாங்கிக்
கொத்தி யேம னுடலைக் குறித்திடம்
விட்டு நோக்கி விரிந்தெழு கற்புடை
பக்கி காற்படப் பாரையப் பாயின. 4

அப்பின் மூழ்கிக் கழுகுரு வற்றவர்
தற்சொ ரூபமாய்த் தாணு நடுவினிற்
புக்கிவந்த புகழைப் பெருக்கிடா
திட்டர் மாமாங்க மென்ற பெயர்க்கதே. 5

பெருக்கா தென்ற் பெருமையை யெந்தையே
சுருக்க மாயுரை யென்னத் தொழுதிடக
குருக்க ளேசைவ கூறிடக் கேண்மியென்
றாடக டவுளைச் சிந்தையைத் தாற்றுவாம். 6

தந்துரை கேளங்க மேமன் சடமுமாம்
முந்திநின் றம்மா மூரி யதன்பின்னாய்
வந்த மாவே வதன மவரிட
சிந்தை யின்படி செப்பின தொப்புமே, 7

ஒப்பு மென்ன மொழிந்தனின் னோதக்கேண்
டொப்பை விட்டேம னாவியாகின் றொப்பை
யப்பி யாங்கம் புவியைக் குடைந்துவான்
வெற்பின் றென்புடை விம்ப மூரம்பிலே. 8

நடுவி லேழ்ந்திட நாரமு மேழ்ந்தவத்
தடமுண் மூழ்கித்தன் சடலத்துட் புக்காமற்
புடையி லோங்கிய பூதரச் சாரலி
னடுவி னிற்கரு ணாக வதனன் முன். 9

ஓடி னன்புகழ் பாடின னோகையோ
டாடி னனெடுத் தாடின னன்பொடு
சூடி னன்பதத் தூமல ரைத்தலை
வாடி டாதேமன் மதகழி ரானை. 10

கைய மர்த்திக் கடவுட்கனிந் தேமா
மெய்ய டுத்துப் புகுவென விம்மியான்
செய்யு நற்றவ மாகுரு சேடுந்தன்
மெய்யெ டுத்துச்துச சுமப்ப விருப்பமே. 11

அதுவு மன்றிப் பழிக்குரு யான்கஞ்ச
மதுவை யுண்டரி மாவனஞ் சென்றிட
வதனுண் ணின்றரி யப்பழி யேற்றற்போற்
பதியி லோதும் பகவ னிருக்கவே. 12

எய்தவ னின்றிட வெய்தம்பு வென்செயு
னாமதவழ் கண்டர் மலரடி பட்டதோ
லுய்தி யானனுன் னாகுருவா னேனான்
செய்தவ மூங்கை சேர்ந்ததென் றேமனை. 13

நோக்கி நடுவன் றருமனென் றெந்நாளும்
பூக்குநற்றிரி புவனத்திலுங் கீர்த்தி
யாக்கஞ் சிறந்த செங்கோலை யகற்றா
தேக்க மகற்றி யெதிர்சட மென்றார், 14

சொன்ன வாக்கைத் துறந்தெரி யாதேமன்
துன்னி யாக்கைபுட் சென்று துலங்க
வன்னி யேற்றி மகிழ்ந்த தனுண்ண னின்று
சென்னி மீதிரு செங்கையைக் கூப்பியே. 15

மாதங்க வானனத் தானை வழித்தி
மாதங்க வானனத் தானவழி களு
மாதங்க வான ணலையுண் மதித்து
மாதங்க வானன லைமலர் போல. 16

சேதிமத்தி யினிற்கச் செங்கோ லேமன்
சேதி மத்தி யினிற்குஞ் செங்கோமுனி
சேதி மத்தினிச் செப்பக்கே ளம்மலைச்
சேதி மத்திற் சிறந்த குருக்களே. 17

மதனை யெரித்த மாற்கண்ட ரேமனுன்
மதனை யுதைத்து மாற்கண்ட னென்னும்
மதனை யளித்து மாற்கண்ட ராயுளு
மதனை யளித்த மாற்கண்டறி யாதவோன். 18

கோமக வான்ம வதைசெய் கொடியோர்
கோமக வான்பதி யிற்குடி கொண்டார்
கோமக ளும்மற மங்கையுங் கூடிக்
கோமகட்கோமா னிடமுறை யிட்டார். 19

சடமடைந் தாவிலையத் தண்டிப் போரிலை
சடமடைந்தமெய் தாண்டிச் சிறக்கிலை
சடமடைந்தபூ தாங்க முடியிலை
சடைமடைந்தையைத் தாங்கிய சம்புவே. 20

மாவெட்டு நீங்காத மனத்தனும் வந்தான்
மாவெட்டு நீங்கா மக்க ளுயர்ந்து
மாவெட்டுந் தாங்க மருண்டயர்ந் தென்ன
மாவெட்டித் தோலுரித் தோனடி மாற்ற. 21

அறவோர் வழியை யகற்றிப் புவியில்
அறவோ ரரச னெறியினை யோதி
அறவோர் தவத்தை யழித்து மவர்பெண்
அறவோர்க் களித்தார் செங்கோல னில்லாதே. 22

ஏம மிட்டவ ரீங்கு சிறப்பிலை
ஏம மிட்டவ ரீங்கங்கு மோங்கிட
ஏம முற்றன ரீசனை செங்கோலார்
ஏழு மற்ற விப்படியி னிலன்றே. 23

புரந்தரன் கண்டருட் புங்கவன் கோவிற்
புரந்தரன் கண்டூஉட் புக்கி வணங்கமுப்
புரந்தரங் கண்டெரி யிட்ட புத்தேளென்
புரந்தரங் கொண்டார் பூமக்க ளென்றேத. 24

அம்முறை கேட்டா னுள்ளங் களிந்து
தம்மின முற்ற தழற்சியி னாலே
மும்மத முற்ற களிறனைக் கூவி
யழ்மூற லிக்கரி விப்பவென் றதர்த்த. 25

முக்கண னேழ்ந்து முன்னின்று வணங்கி
யப்பண்ணி யெந்தா யந்தக னீங்கிலை
சொற்றணி மேரிற் றுலுங்கு முடியெனு
மட்டணி மாட்சிஇ மன்னுஞ் சிரகிரி. 26

எழுசீர்கழிநெடிலாசிரிய விருத்தம்.

தென்புடைவிம்ப முரம்ப நடுவிற்
செந்தணற் கொழுந்து விட்டெரித்து
துன்டடையாமல தனடு நின்று
சோமனீ ரொளிபுரை லிங்க
மின்பொடு வாமக் கரத்தினிற் றுங்கி
யிமன்றவஞ் செய்கிறு னென்ன
வன்பொடு தானு வனத்தினு னிறைந்த
வறுமுக னுரைத்தனென் றறைந்தார்.

உரைத்திடு மகவை யிருகையாற் றழுவி
யுமையவ டிருமுக நோக்கி
கருத்தெணம் வேறு யிளையசே யையுங்கை
காட்டின னெனவேயுன் னகைத்து
மருத்தொடர் தடவு முளங்கனிந் தீசன்
மறலியின் றவத்தடங் குறித்தே
மருத்துவ னயன்மான் மங்கையர் கண்ங்கள்
வானர்க்ண் முனிபுடை சூழ. 2

விடையினி லாரோ கணித்துடி சிலம்ப
விருதுகள் சிவகண மெடுத்துப்
புடைதனி வாணி யெனவிரு கதிர்கள்
புனிதனோர் பாவிடா தோங்கி
கடுநடை வேகம பசுங்கிளி பூட்டிக்
கவிழொரு திகிரி தேருரையத்
தடமட லோடு பரித்துச சூர்ப்படையைத்
தடிந்த வன்கையாற் பிடித்து. 3

அருகினில் வருக வமரர்க டுதிக்க
வந்தர துந்துமி முழக்காற்
றிரிபுவ னங்கள் செவிடுற வையன்
சிரிகிரிக் கேகமுன் னேகிக்
கரிமுகன் முருகர்க் கறைந்திட வேளுங்
கதிர்குந்தப் படையரைக் கூவி
தருமனீங் கியற்றுந் தவத்தினின் மாட்சி
தானென மன்த்தினின் மதித்து. 4

தந்தைதாய் வரவைத் தனுசர்கட் கோதித்
தங்குகோட் டங்தோ ரணம்பூ
பந்திபந் தியதாய்த் தடங்களுற் றிசையுஞ்
சமைத்திட மயனுக் குரைசொன்

முந்திவா னடுத்து மயனொடு குயிற்றோர்
முகூர்த்தத்தி லாற்றெனை மொழியச்
சிந்தையுங் கனிந்து மனுசத்தி திடத்தாற்
சிறப்பித்தான் சிவங்களிப் புறவே. 5

மாற்கொண்ட வூர்தி யயனண்டர் சூழ
வால்விடை யினிலுமை யுடனே
மற்கண்டர் சிலம்பின் புடையினில் வருக
மாட்சியைக் கண்டருண் முருகன்
காற்கொண்டு வலிய சமர்புரி பறவைக்
கொடியிடக் கரத்தினும் வலக்கை
வேற்கொண்டு வீரர் புடையினிற் சூழ
விமலனை யெதிர்கொடு பணிந்தார். 6

பணிந்திடுங் குளவி தனையிரு கையாற்
பண்புறத் தழுவிமுன் னமர்த்தி
குணந்தளர்ந் திடுமார்க் கணிகளும் பூட்டிக்
கோமக ளேக்குக ணிணைகண்
மணந்தரு மலர்த்தே னுண்டு ரீங்கார
விசைசெவி படரவாழ் வலர்கட்
பணிந்திடுஞ் சிரமபோற் கதழ்நெறற் குலைகட்
பணிந்தன விறைவனைக் கண்டு. 7

கருப்பு வில்லேறு மருப்பூ கள்ளாரு
மலைப்பூ வெலாம்வனப் பூவாய்
நெருக்கி வன்னரி லிறுக்கி மினார்க
ணிமைக்குமு னுளர்கை யளிக்க
எருத்தினி லேறி யுருத்திரர் வாரு
மிடத்தினீட் டோரண மமைத்து
இருட்டனை மாற விரத்தின மாலை
யிடைக்கிடை சூழத்தொங் கிட்டார். 8

பரவையிற் சிறந்த மகரங்கட் படர்ந்த
பிரவாள முத்தையுங் கவ்வி
பரவிய தென்னைத் தலைநிமிர்ந் திசையாழ்
முனிவரு மியாவரும் பார்க்க
இரவியி லணிந்த தோரணங் கடந்து
வருகுமு னேமனே ருற்றுப்
பரிவுடனிலிங்கம் பாறையி லமர்த்திப்
பரமனைக் கண்டடி பணிந்தே. 9

எழுந்துடல் விதிர்ப்ப விருவிழி யாழி
யருவிபோல் வழிந்திட விம்மி
மழுந்துடி யுழைக்கை வயங்கிட விடையில்
வாமத்தி லுமைபவள் விளங்க
வெழுந்தெனை யாள வந்தருட் கடலே
யெந்தையே இந்து சானவியுந்
தழைந்தசெஞ் சடையா தயாளமெய்ப்பொருளே
சம்புவே சங்கரா போற்றி. 10

காமனையெரித்த கடுந்தணற் கண்ணா
கருணை செயிருகண் முக்கண்ணா
கோமனை முகப்பென் னுதைத்தொரு
காலா குளிர்ந்தெனை யாளிரு காலா
சோமனைப் பிறித்தோர் கலையணி சடையா
சோடச கலைமுகச் சடையா
ஈமனை நடித்த விதமினென் றறியே
னீசநின் செயலையு மறியேன். 11

ஆக்கலு மழித்தற் படைத்தலுங் காத்த
லனைத்தினும் வலசித்தனேநின்
சேர்க்கை யிலாத செந்துமெய் யுண்டோ
சிவனையை யிரண்டொரு பாலாய்

நீக்கமிலாதைம் புல்ப்பொறிக் கரசே
நிமலனே யான்செய்த பிழையை
தூக்கிடா தடுத்த குணநிதிப் பொருளே
தொழும்பனுக் கருடரும் பொருளே. 12

தலைத்தொடர் வாக்கா மணிப்பணி நாகா
பரணனே பரமனே யேம
மலைத்தடி யாகவளைத்தவன் கரனே
வையனே மெய்யனே யடிய
ருலைத்தடஞ்ஞைகை யொடுதடுத்தாளு
மூத்தம குணநிதியே என்
னிலைத்தட மாகவந்த பேரின்ப
நிமலனென் றேத்திடுங் காலை. 13

அரிமுதன் மிருக மியாவுங்கேட்
டயர வம்மலை யாவுங்கண் கதற
அரிமுடி சிறந்த பக்கிகட்பாவை
யனைத்துங கலடியினிற்றேங்க
அரிமுடி தனில்வாழ் கட்செவி யிலலா
வகறிணை களுஞ்சில தழுங்க
அரிமுடி சிவன்றுட் பணிந்தெழுந்
தழுகு மாடலைக் கண்டதா லமமா. 14

எரிமற வினைசசூழ்ந் தெழுந்துதன் குணமற்
றிந்துதண் குணந்தர தென்னச்
சுரருற வருக்கோ திடமதி யாருஞ்
சூடுவோன் றிருவடி தாக்கு
முருவுற லனலம் பணிதந்த மாட்சி
யுரைத்திட மாலய னுற்று
தரையிறை கடுவன்றருமனென் றிடும்பேர்
தருந்தகு மென்மொழி கேட்டு. 15

கதைத்திடுங் கிளவி செவிக்கின்ப
முறமாற் கண்டரின்கழலினி லேழு
நுதற்பட வுடலுக் கின்பமா யவையாத்
தங்கொடுத் தெழுவென நொடித்து
கத்திடும் பதும கரத்தி னீண்மகுடம்
பற்றியே மறலிகொன் சிரத்திற்
பதித்தினிச் செங்கோற் கடவுளென்
றுரைத்துன் பதிபடர் தியெனவப் போது. 16

ஆக்கைக்கா வியைச்சேர்த் ததுக்குழூ,
ணதுதே டிடச்செய்த தேவனேயந்த
சேர்க்கைக்கா ண்டிதுவென றேயுலகிட்ட
சித்தனீ ரிருக்கவே யென்னை
சாக்கைக்கா வைத்த ரென்றறி யாமற்
சகலருமேசிட வுயிரை
நீக்கற்கோ முடியை சூட்டி நீ ரென்ன
நிமலனும் புன்னகை புரிந்தே. 17

இயமநீ யம்பெய்தவ ஞெனென்
றெண்ணுவா ரென்னடியார்க
ளாது மேலின்பு வைத்தரோ வறிவா
ரவனியிற் கோடியி லொருவர்
அயாக மாம் பின்பு வென்னடி சார்வா
ரறிவிலா ரேசலா லென்ன
நியமமே யன்போ டேத்தின தாலின்
னிலம்வந்த னென்னவு மறைவார். 18

## கலிநிலைத்துறை.

### அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

இன்னிலஞ் சத்தி கூரா யெழுந்த சென்னிமலை யாகும்
வன்னியா ரருணைக் குன்றாய் வளர்ந்தவ ஞனே யாகும்

பொன்னுல கோர்க ளின்னற் பூதர முமையா ளென்பர்
இன்னுல கறியார் சென்னி மலையென்றே இசைப்பார் கூற்று. 1

உர்த்திர வமிசத் தோன்றன் னுமக்களித் ததனுன் மௌலி
பெத்தனே யென்கை யாரப் பிரமன்மால் தேவர் நோக்க
சத்தியங் கிரியிற் சார்ந்து தவஞ்செய மொழிந்த பிர்மஞ்
சுத்தனைச் சொல்லா நாத வித்துமாச் சொலித்த தம்மா. 2

ஒருவனுக் கொருவ னுலு மோதிடு நோயி னுலுங்
கருவி யுப்புத் தீயாலுங் கடுவிடந் தன்கை யாலு
மருவிய யாக்கை யாவி மாறித்தென் றுலகோர் மாற்ற
வருளினே னுன்பேர் தூற்று ரந்தக பதிசெல் லென்றே. 3

மாற்றியுங் கடையூ ருந்தன் மகுடத்தைக் காலாற் றட்டி
தோற்றிய சிகர மேரிற் சுடர்முடி கையாற் சூட்டி
கூற்றநீ கொண்ட தாலிக் குவட்டெம கூடமேன்றே
சாற்றினே னோர் நாமந்தான் தானுவுக் கின்ன மோர்பேர். 4

யாவர்க்கு முதல்வ னெந்த னருமைமுன் னவனுன் னங்கம்
பூவுக்குட் படியு வொட்டாப் பூங்கழு வுருவங் கொண்டு
தாவித்தன் மூக்காற் கொத்தி சையிலத்தில் வந்து நின்றவ்
வாவிக்காக் கையைதந் தாண்டவாதியாங் கழுக்குன்றமே. 5

களவினர் விடையை யேற்று கெடிதலஞ் செல்ல வேமன்
அளவிலா நந்தம் பொங்கி யமரர்க டிதிகக வீசன்
கிளர்விரி யயில னேடு கிரிவலம் வந்தவ் வுச்சி
வளர்விரி கோட்டம புக்க மார்கண்ட முனிபூ சித்தார். 6

## புட்பகிரி மான்மியம்.

### கலிநிலைத்துறை.

மார்கண்டர் வந்தகாதை வசனித்த னீட்செப் போட்டின்
மேற்கண்ட கிரிக்கிப் புட்ப மேருவென்றோர் நாமத்தை
காற்கண்டு மொழிவன் கந்தக் கடவுளைப்பூ சித்தேற்று
மார்கண்ட குலத்தில் வந்த மறையவா கேண்மி யென்றே. (1)

வான நாட்டினில் வச்சிர வாட்படை வள்ளர்சபையிற்
கான விஞ்சையு ரியக்கர் கிம்புருடர் காந்தருவர்
கூனல் யழினர் வானவர் கோதில்பல் கேள்வியினிற்
போன சிந்தைய ரேனையர் முறைமுறை போற்றவே. 2

இருகு ரும்பைமென் முலைகளும் பூண்களு மிமைப்ப
பொருத டங்கணுள் புலோமிசை யொருபு டையிருப்ப
வருகு மேனகை திலோத்தமை யுருப்பசி யரம்பை
தேருவை மாதர்குற் றேவற்பன் முறைமுறை திருத்த. 3

சீர்க டந்தவ தரணி மண்டபத்துட் செழும்பொன்
ஞேர்க டந்த சிங்கா சனத் திந்திர னிருக்கிற காலை
கார்க டந்தபூங் குழலெழிற் கரணிய ரிருவர்
வார்க டந்தபூண் முலையினர் சூழ்வர வந்தனரே. 4

ஆட லன்றரங் கெனுமவா ளனுமதி யொாறு
தோட லர்ந்த தார்மணங் கவர்ந்து சூழ்கண் பரப்பி
பாட லுஞ்சது விதங்களும் பரதத்தின் பண்புங்
கூட நின்றுகூத் தாடின முனிவருக் கொப்பமால். 5

போகி யென்பெயர் நிறுத்திடப் புரந்தரன் காணூர்
மோக முள்ளுறுத் திடமன முகிழ்த்தனப் பொழுதிற்
ரோகை மாந்தருந் துணைவிழிச் சுரும்பு தூதாக
வேகி டப்பணித் திதையமு மவனிடத் துய்த்தார். 6

ஆய காலையிற் புரந்தர னருகினி லழைத்து
சேய மாமணிப் பூணணி தூசணி செலுத்திநன்
வாயினுன் மலர்க் கண்ணினுற் கையினுன் மடமாத
ரேயு மாருள முணர்தரச் சூட்சியி னிசைத்தான். 7

சொற்ற சூள்வுவெள் விடைப்பிரான் றூல்புவி யதனி
லொற்றை நான்முகன் சென்னியுந் தொன்றினைக் கொய்திட
குற்ற சென்னியீ ரோடென வுடைந்துவீ டலத்தைப் [லாங்
பற்றி வம்மினே னென்றனன் பணிந்து போயினரால். 8

விண்ண னின்னன நிகழ்த்திட விதிவழி யதனான்
மண்ணி னித்தலத் தெம்பிரான் கோயின் வாட்கையிங் கிரியம
பண்ணா நன்மொழிப் பரத்தையர் பாற்றுணை வியரும்
மண்ணில் வந்துதித் தர்கடறை மகட்போலம் மின்னார். 9

பாரு தித்திடு மிருவருமம பருவங்க டோறுஞ்
சீரு தித்திடத் திருவங்க ளுதித்திடச் சிறந்தே
யேரு தித்திடுஞ் சிறுநல்லார் பெருநல்லா ரென்னும்
பேரு தித்திடு மிருவரும் பிறையென வளர்ந்தார். 10

பூங்கழங்குபந் தம்மனை யூசல் பூவையரோ
டாங்க மர்ந்துபல முறைவிளை யாடிய பின்னர்
பாங்க மைந்ததங் குலத்தினுக் கொற்றவாம் பரதந்
தீங்குரா வகையா சிரியமுற செயன்முழு துணர்ந்தார். 11

கலிவிருத்தம்.

வண்டமிழு மாரியமு மாறில்பல நூலும்
கொண்டிசைக ளேபயிலவு கொண்டுமுறை பாடி
தண்டரள மாலைதவ ளத்தொடையல் சூடி
அண்டர்புகழ் வாணிங்க ராமென வளர்ந்தார். 12

மங்கல வளம்பல மகிழ்ந்துதின மேவிப்
பொங்குநறு மாமணி புலன்கல னணிந்தே
குங்கும நரந்தைமுலை கொட்டியெழின் மீறிச்
செங்கமல பீடிகை சிறந்ததிரு வொத்தார். 13

மந்தர முதற்பிறவு வந்தமணி வீணை
தந்திர நரம்பு தடவந் திசைபயின்று
சிந்தைபுரி மாதவர்கட் செஞ்செவி கவர்ந்து
கந்தருவ மங்கையர் கவின்கொடு வளர்ந்தார். 14

பாரினுள போக முழுதும் பரிவினாய்ந்து
வேரிமலர் செம்பொனின் விளங்கிட மிலைந்து
தோரிய மடந்தையர்கட் சூழ்நடன மாடி
யாரவிள முரலயி ராணிங்க ரானார், [illegible]

மாமதன வேள்வியின் மனம்புகிடா தார்ந்து
நாமமுறு காமகலை நாடொறு நவின்று
தூமமல ரோதியர் தொழும்படியிருந்து
காமர்தழி யாலிரதி கட்டழகை யொத்தார். 16

கெண்டைவிழி காதொடு கிடந்துலவி மீளக
கொண்டழக வண்டு குமிறிக்கு முறியாடத
தண்டைகட் சிலம்புகள் சலசல வெனததான்
பண்டைமுறை போல்நடன மாடுவ பயின்றார். 17

பன்னலிசை யான்முனிவர் பண்பினை முடிப்பா
ரின்னகையி னுலுலக மேழினையும விரப்பா
ரன்னநடை யாலமர்ந் தயன்றனை யழைப்பார்
வன்னமுலை யான்மதன் முடிககவினை மாய்ப்பார். 18

15-பா-3- அடியிற் தோல் இயலென்னும் பாலை-தோரிய-வென்பது.)

ஆடவட் களிற்சிறப் பமைந்த சுமங்கல்யப்
பீடுகொள்கை சூலையர் பிறப்பினி லுதித்து
நாடுவிதியின் பயனையார் நவில வல்லா
ராடவர் தமக்குமணி யல்குல் விலைகூறுர். 19

இத்திரமி ஞர்பூமி னிருந்துவளர் நாளிற
சித்தமகிழ்ந் தாயரொடு சேடியர்கள் கூடி
யததாதிரு முன்பி லரங்கேற்ற வென நாடி
மெத்தவுமின் ஞரைமணி வீதிகொடு புக்கார. 20

கன்னியர்கட் கட்களெதிர கண்டுளைகட் சூழ
மின்னுலவு சாயலது கண்டுமயின் மேவ
அன்னநடை கண்டுமிக நாணி யயலபோக
மென்னடை யயின்றுமெல்ல மெலலென நடந்தார். 21

போரழகு கண்டுசிலர் பெதுறல்கொள வாரு
மாரமுலை கண்டுசில ரங்கனயர் வாரும
பேரரவழி கண்டுசிலா போற்றி மெலிவாரு
மூரலெதிர் கண்டுசிலர் மோகமுறு வாரும. 22

நில்லுநில்லு மென்று சிலர் நெஞ்சநெகிழ் வாரும்
புல்லுமெமை யேவிலை புரிந்திடு மென்பாரும்
நல்லநல்ல ரோரென நவின்றிடு மென்பாரும்
மில்லையிடை யோசிறு திருந்திடு மென்பாரும். 23

ஆடவரிவ் வாறுபுடை யஞ்சலி திருத்தப்
பாடக மணிந்த பதநோவ நடைகொண்டே
யேடுதிகழ் கொன்றையர்தொண் டீசருறை கோவில்
நாடக நவின்றிட நலங்கொடு புகுந்தார். 24

அறுசீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

சென்று நடனம் புரிபசும்பொற் செழுமா
மணிமண் டபமேவி
கன்று மதிமான் புனைந்தவர்தொண் டீசர்
கழற்சே வடிபோற்றி
நின்று தமியேன் றனையாண்டு கொள்வா
யென்று நெகிழ்ந்துருகி
நன்று புரிநா டகநவில நறைமா
மலர்தூய் வணங்கி நின்றே. 25

ஆடற் கேற்ற பல்வியக்க மார்ப்பச்
சதுமா மறைநெறியிற்
பாடற் கேற்ற குழலிசையாழ் பயின்றே
யிசையின் பண்ணெழுப்பக்
கோடற் கேற்ற கைத்தலத்தின் விதமுங்
கூத்தின் குணமும்விழி
நாடற் கேற்ற வவையகத்தி நலமுநயப்ப
நடிக்குங் காலே. 26

அம்பு ராசி சூழுவனி யரசர்
நெருங்கும் வையகத்தே
கொம்ப னார்கூத் தவிநயத்தின் கொப்புக்
கேற்ற மண்டபமீ

தேம்பி ரான்மண் டபமெனுமீ தென்னுங்
காணு வாயிரக்கா
லும்பர்கோவங் துறைந்திடுமண் டபமும்
வேணு மெனவுரைத்தார். 27

மொழியு மாறறங் துணையுநல்லார்
செவியிற் புகலு மூ துணர்வின்
வழியு மகவான் மொழிந்ததுவு
மனதி லுதிப்பமறைத் ததனை
யொழுகி நின்று சன்னதிப்பே
றளிப்ப வாங்கி யுடையானைத்
தொழுது நினைத்த வரமெமக்குத்
தருதி யென்னத் துணிந்துரைத்தார் 28

விடைகொண் டவையி லொருவரையு
நோக்கா தகன்று மின்னனயார்
புடைகொண் டேத்த வினவிடத்திற்
போகிப் போகிப் புணர்ப்பையெண்ணி
படைகொண் டிடுகண் படைகொள்ளா
திருக்கும் பருவந் தனிற்பொன்னங்
தொடைகொண் டெழுந் திந்திரன்
றெண் டீசர்பாதந் தொழவுவந்தார் 29

வந்து வழிபா டாற்றியருள் வளங்க
விருவர் மனைமேவி
முந்த நிகழ்ந்த வாறவர்க்கு
மொழிந்து மகிழ்ந்து மானிடர்போற்
சிந்தை புரிந்து கலவி யின்பஞ்
செலுத்திச் சிலநாட் செல்வதனை
யிந்த ஞாலத் தாடவர்க ளறியார்
பிறிதொன் றிசைக்கலுற்றார். 30

தந்தம் மனையுட் டிரவியங்க ளெல்லாந்
தாமே கொடுசென்று

பந்த முறுங்கா மப்பிணிநோய் பகர்ந்து
குறைபா டுரைத்திடினும்
நிந்தை மொழிந்து நீவிரிது நிகழ்த்தா
தொழியு மெனவெறுத்தே
இந்த நெறியி லொழுகிடுங்கா லிளைஞர்
மயல்கொண் டிகழ்வு கோண்டே. 31

ஒருசேரத் திசைமுழுது மொருகோ
லோச்சி யுலகாளும்
பொருநன் கிள்ளி வளவனுளம் பொலித
லயர்வுற் றிருதுரைப்ப
வருதற் பயனை யறியாம லவரை
யழைத்து வம்மினென
பொருவித் தூத ரரசனுமை விளித்தார்
பொதுமி னெனப்புகன்றார். 32

அரசர் விளிக்கு நிமித்தமவர்
தமக்குமெமக்கு மியாதென்ன
வுரைசெய் துரவுத் தோழன
ரும்முடன் யான்வருவ தில்லையென
விரைவின் முனிந்து விளம்புதலும்
வெறுவி யுளையா மீண்டிறைவ
பரவி யுரைப்ப மனந்தெரிந்து
வாளாதிருந்தான் படிபூப்பான். 33

சிலநா ளிங்ங னிகழகாலத் தொருநாட்
சினவெள் விடையோன்செம்
பொலனுர் கோயி லிற்புகுந்து
பண்டொப்பணிகட் புரிந்திடுவோன்
கலனுர் முலையார் சார்ந்தாற்றி வீசக்
கவரி கால்சாய்த்து
பலகால் வீணை விரலுளர்ந்து பாடற்
பயிலுங் காலத்தினின்னே. 34

பெருமான் பெருந்த கிள்ளியுமெம் பெருமான்
மணிப்பொற் கோவிலெய்தி
மருமா மலர்கொண் டருச்சித்து வழுத்தி
வாயற் பிறம்வருங்கா
விருமா தருந்தம் பணிமுற்றி யிறைஞ்சி
யரச னுறைகின்ற
திருவா யலின்வந் திடுபோழதிற் சிலர்தா
மிறைவற குரைசெய்வார். 35

அய்ய நினது மொழிதிறபப
லகவன் மாத ரிவரே யன்னத்
தையலீர் நீ்வம மினெனச்
சாற்று மிறைவ னருகுசெல்கால
நெய்யுண் கதிர்வேல் விழிமடவீா
நீவி ரியாவ ரெனவினவ
வையம பிறப்பீறு தேவடிமை
மரபி லுத்த மாதரென்றுர். 36

பொதுமா மகளீ ரெனில் நீவிர் புரணப்
பொருந்தி ஞேர்பொருட் கொண்
டிதுபோ தனேயே யென்பதெவ
னென்றுர்க் கருநீர் ஞாலத்தி
லுதியா நிற்போர் தமைப்புணர்வோ
மெனவேற் கிறைவ னுளநகையா
மதுவார் குழலீர் புணர்குறியுண் டதுநீா
மறைத்தீ ரெனவுரைத்தான். 37

சொற்ற மாற்ற மதுகேளாத்
தோகைமார் புன்னகை மூகிழ
வுற்ற துரைத்தீர் மானிடரை யுவந்து
புணரோம் புரந்தையில்வாழ்
வெற்றி யுடையோன் றிருவருளால
விண்ணுட் டரசையாம் புணர்வோம்

பெற்ற பெரும்பே ராற்பகர்ந்த வாய்மை
பிறழா தெனமொழிந்தார். 38

ஆய்மி ஞரே கற்பகநாட் டயிராவதப்
பாகனைக் கொண்டிப்
பேரய்மனை பூமாரி செம்பொன் மாரி
பொழிவித்த லல்ல நல்ல
வாய்மை யுடையீர் கற்புடையீர்
மழவெள் விடையோ னடிமையுநீ
தூய்மை யுடையீ ரேமாரி சொரிவிப்
போமென் றுரைத்துச் சென்றார். 39

அந்த ஞான்றி லிருவரை யாமத்தி
லயிரா வதக்கோமான்
வந்து நல்லாரைப் புணர்கான் பாற்ற
முரைப்பத் தொடுத்தகல
முந்து முடிச்சி கரவரை முழுது
மந்த நாடனத்துஞ்
சிந்து நரும்பூ மாரி செம்பொன்
மாரிபொழிந் தவந்தனவால். 40

பெய்யுந் தொறுங்கண் டதிசயமே பெரிதும்
விளைத்தார் நல்லார்முன்
செய்யுந் தவங்கற் பினைபோற்றி திருந்தத்
துதித்தார் புரைந்தையுள்ளார்
அய்யன் கருணை தனைத் தொழுதே
சிலநாளிருந் தாரிமை மடவார்
வய்யந் தணத்த ரந்தணராயம் பொன்னு
டனத்து மகிழ்சிறந்தார். 41

அன்னு டதனைப் பூந்துறைநா டென்று
மன்னுட் டுறைப்பதிக்கு

நன்று மந்தான் பூந்துறையூ ரென்னு
மன்னகரில் வாழமலன்
றன்று மந்திரு முகமலர்ந்த தாங்தோ
ணீசன் றடஞ்சிகரப்
பொன்றார் கிரிக்கிப் புட்பகிரி யென்னும்
போற்றப் பொலிந்தனவாம். 42

தாதார் முளரி மருமசா வணமா
முனிவா தடம்பொழிற்பைம்
போதார் சிகர கிரிபுட்ப கிரியா
னதுவும் புகன்றனமேல்
வேதா விறைஞ்சுங் கதிரிலைச்செலு வேலோ
னிடும்பன் றனக்கு வழி
யீதா மெனக்காட் டியசீர்தா மெடுத்து
மொழிது கேட்குதியால். 43

---

## இடும்பனுக்கு வழிகாட்டிய மான்மியம்.

### கலிவிருத்தம்.

மலைய மாமுனி வழிபா டுஞற்ற
வலையார் சிவகிரி சத்தி யங்கிரி
நிலைபெறக் கொணர்து மென்ன நீங்குபு
தலைமை திரிகூட சலத்தினில் வந்தான். 1

சூரன் முதலி யோர்க்குத் தொல்படை
யாரணி யார்த்திடும் பாசு ரன்றிறல்
வீரர்சேய் வேலினல் வீழ்ந்த காலையிற்
றுரமோ டகன்று வந்தன் சயிலத்தே. 2

மறைவொடு வந்தவன் முனிவன் வந்துழி
யறைக ழற்றெருடுத் தடுத்த வாரெலாமல்
குறைவரக் கூற லுங் கும்ப மாமுனி
திறலிகொய் வெருவலன் றபயஞ் சேர்த்தியே, 3

இந்துசூழ் கைலையெம் மிறைவன் றந்திடக்
கந்தமால் வரையினிற் கவினி யோங்கியே
எந்தையெம் மிறைவி நாமங்க ளெய்திய
மைந்துறு சிருங்கமோ திரண்டும் வாங்கியே. 4

ஈறிற் கேதார வீசான திக்கினில்
மாறுதிர் பூர்ச்ச மாவனத்தில் வைகுங்
கூறரு மவ்விரு குவடு கொண்டு நீ
யாறுக ணீந்தீண் டடர்தி யென்றரோ. 5

யோகுரு மந்திர வலிக ளுத்திநீ
போகெனப் போற்றிப் பொருப்பை விட்டொரீஇ
வேகமுற் றதிர லவிழ்த்துக் காசியி
லேகி யயனம் மிறைவனைப் போற்றி. 6

எந்தை கேதார வீசானத் தெய்தியே
பைந்த மிழ்முனி பகர்வ னத்தினி
லந்த மாமுடி யரிச்சித் தம்முனி
தந்த மந்துண்டு கொடு சமர்த்தனோர். 7

பிறை யெயிற் றுக்கரும் பிரமதண்டத
திறையன் மாவுறி யெனப் பிணைத்தரோ
வுறையு மவ்வரை யுத்தெ டுத்தனன்
குறையி லாவலியொடு கொண்டு பேர்ந்து. 8

காசியி னோங்கிய கங்கையை நீந்தி
மாசறு விந்த மலைப்புற நீங்கி
யாசறு சீர்மல்லி யார்ச்சன மேவி
வீசிய தென்கையி லாயம் விடுத்தே. 9

அன்பினர் சூழரு ணாசல நேர்ந்து
மின்பொலி நன்முதுக் குன்றினை மேவி
யின்புறு காவிரி யாறு கடந்து
பொன்பொல புட்ப கிரிப்புற நுற்றான். 10

ஆறதர் கண்டில னஞ்சின னெஞ்ச
மேறின னவ்வரை மீதி லெடுத்த
கூறிரு வெற்பொடு கொட்புற நின்றே
தேறுத லேது மிலாது திகைத்தான். 11

ஆயிடை மேவிய வள்ளிலை வைவேற்
சேயொளி ராதவர் சென்னிற மன்னர்
பாயொழு கன்மெய் படைத்த வனப்புத்
தூயவெண் மூறல துலங்கு செவ்வாயும். 12

செச்சை கமழ்ந்து சிறந்துயர் தோளுங்
கசசையில் வாளொடு கட்டு மருங்கும்
பிச்சி நறுந்தொடை பெய்சிகை வாய்ப்பும்
வச்சிர மாலை வயங்குபொன் மார்பும 13

தொட்டிடு தோற் கழற் சூழிருதாளு
மட்டவிழ் செங்கையில் வாளியும விலலுங்
கட்டெழின் மீறிய காவல வன்போற்
கிட்டின னைகை கிடைத் தெதிர் நின்றான். 14

எய்திய போழதி லிடும்ப னெதிர்ந்தே
மைதவி மேனியன் வண்டமர் தாரோன்
செய்தவ மோருரு வங்கொடு சேர்ந்தே
யுய்தவர் வந்திவ னுற்றது வேயோ. 15

ஒண்டொடி பாலுமை யும்பெரு மானே
வண்டுள வம்புனை மாயவ னேயோ
பண்டய பூமி படைத்தவ னேயோ
வண்டர்கள் சூழயி ராவத னேயோ. 16

கன்னலு மைங்கணை யுங்கை சிறந்த
மன்மத னிவ்வழி வந்தன னேயோ
பன்னிரு செங்கை படைத்தசெவ் வேற்சே
யென்னையு மாட்கொள வெய்தன னேயோ. 17

அன்றியு மோர்குடை நீழ லனைத்தும்
வென்றிகொள் காவல வேந்திவ னேயோ
வன்றிற லம்புவில் வாட்கையி லேந்தி
நின்றவன் யாரென நேச நினைந்தே. 18

அறுசீர்கழி நெடிலாசிறிய விருத்தம்.

ஆரைநீ யீண்டு வந்த காரண மென்னை யன்றே
பாரி லோர் செங்கோ லோச்சிப் பனிமதிக் கவிகைநீழ
லாருயி ரனைத்துங் காக்கு மரசரோ யேரென் றுதை
வேரியந் தாரோ யீங்கு வேட்டைமேல் வந்த னென்றார். 19

நீயசு ரேசன் போல நின்றனை வரைக ளேந்தி
சேயிடை பரந்து மீண்டு திரும்பினை போலு மாண்டைக்
காயிறு சிந்தை வைத்தீண்ட டைந்தனை வரையினின்மீ
தேயுகா ரணமே தென்னும் வேலவர்க் குரைக்க லுற்றான்: 20

மன்னவன் குரவன் கும்ப மாமுனி வரையி ரண்டுந்
தன்னுழி கொணர்தி யென்று சாற்றிய பணிமேற் கொண்டு
சொன்னவா ரடைந்து பூர்சசவனங்குறிச் சிறும்பி ரண்டு
மென்னிரு புயத்திற்றாங்கி வருமிடத் திடையூ றுற்றேன். 21

அருண்முனி சொற்ற வாறு பிழைத்துவந் தடைந்தேன் விந்த
மருவிய வதர்கொண் டீண்டு வந்துழி மருண்டு நெஞ்ச
மிருண்மிடைந் தலம்வந் திந்த வரைமிசை யேறுங் காலை
நிருபநிற் கண்டே னேகும் நெறியினை நிகழ்த்து கென்றான். 22

தானவ நீமுன் னுற்றுந் தவப்பய னவனி வந்தாய்
வானவர் போற்றுஞ் சென்னி மாமலை யாயி யும்பைந்
தேனிமிர் பொழிற்சூழ் புட்ப கிரியெனுஞ் சிறந்த பேரு
மானதிவ் வரையீண் டென்று மறுமுகக் கடவுள் வைகும். 23

சொல்வழி முனிவன் முன்னஞ் சொற்றவ வழியி லீது
நல்வழி நடந்து சென்று நருமுனி வார்க வெற்பிற்
செல்வழி யருவிச் சார வடதிசை யவ்வகிச் சேரிப்
பல்வழிக் கவலை தீர்தி புட்பகிரி மலையுந் தென்றான். 24

